குல திலகராகிய ஸ்ரீ மெய்கண்ட தேவருக்குச் சைவ சித்தாந்த ஞானத்தை நல்கி யருளினார். அவர் சித்தாந்த வுண்மைகளைச் சிவஞான போதமென்றும் அரிய தலைமணி நூலுள் தொகுத்துரைத்தத் தமது மாணாக்கர் நாற்பத் தொன்பதின்மருக்கும் அறிவுறுத்தருளினார். அம்மாணாக் கரது பரம்பரை வாயிலாகத் தமிழ் நாடெங்கும் சைவ சித்தாந்த அறிவு தழைத்தோங்கிற்று. அவருள் முதல் நின்ற வர் மெய்கண்ட தேவ நாயனாரது தந்தையின் சமய ஆசிரிய ராகிய அருள் நந்தி சிவாசாரியர். அவர் சிவஞான சித்தியார் இருபாவிருபது என்கின்ற இரண்டு நூல்களையும் இயற்றியருளினார். அவருடைய ஞானப் புதல்வர் மறை ஞான சம்பந்த சிவாசாரியார். அவருடைய மாணவர் தில்லைவாழ்ந்தணர் தலைவராகிய உமாபதி சிவாசாரியார். இவர் சிவப்பிரகாசம் முதலிய எட்டு ஞானநூல்கள் இயற்றி யருளினார். சிவஞான போதத்திற்கு முன்பே திருவுந்தியார்' திருக்களிற்றுப்படியார் என்ற ஞான நூல்கள் சிறந்து விளங்கின. ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனாரது மாணாக்கருள் ஒருவராகிய மனவாசகங் கடந்தார் என்பவர் உண்மை விளக்கம் என்னும் அருள் நூலை இயற்றியருளினார். இந் நூல்கள் பதினான்கும் மெய்கண்ட சாத்திரம் எனப் பெயர் பெற்றன.

மேற்கூறிய உமாபதி சிவாசாரியரிடத்தே அருள் நமச்சி வாயதேசிகர் என்பவர் ஞான உபதேசம் பெற்றுத் திருவா. வடுதுறையில் தவமிருந்த சித்தர் சிவப்பிரகாசருக்கு உப தேசித்தருளினார். சித்தர் சிவப்பிரகாசரிடம் திருவாவடு துறை ஆதீன முதற்றலைவ்ராகிய நமச்சிவாய மூர்த்திகள் ஞான உபதேசம் பெற்றனர். அவர் தமது ஆசிரியரது கட்டளைப்படி திருவாவடுதுறையில் எழுந்தருளியிருந்து சிவப்பிரகாசதேசிகருக்கு ஞான தீக்கை செய்து சைவ சித்தாந்த நூல்களை அறிவுறுத்தருளினர். அச்சிவப்பிரகாச தேசிகர் தமது ஆசிரியர்பால் விடைபெற்றுச் சிதம்பரம் சென்று அங்கே திருக்கோயிற் பூசைக்கு வைணவர்களால்

நேர்ந்த இடையூறுகளை நீக்கிப் பின்பு ஞான நிட்டையிலே வீற்றிருந்தருளினர். பின்னர், ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் மறைஞான தேசிகர் என்னும் தக்க மாணவர்க்கு ஆசாரிய அபிஷேகம் செய்து உபதேசித்தருளினர். அவரும் ஞான நூலுணர்ச்சி பெற்றவுடனே இடையறாத நிட்டையில் அமர்ந்தருளினர். ஆதலால், மீண்டும் நமச்சிவாய மூர்த்திகள் தமது பரம்பரையில் ஞானோபதேசமும் ஞான நூலுணர்ச்சியும் திகழ்ந்தோங்கும் வண்ணம் அம்பலவாண தேசிகர் என்பார்க்கும் தக்ஷிணாமூர்த்தி தேசிகர் என்பார்க்கும் உபதேசம் செய்து பட்டம் கொடுத்து சைவசித்தாந்த நூல்களைப் போதித்தருளினார். அவருள், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம், உபதேசப்பஃறொடை என்னும் இரண்டு அரிய நூல்களைச் செய்தருளிச் சின்னப் பட்டத்திலிருந்த வண்ணமே கடவுளோடு இரண்டறக் கலந்தனர். அம்பலவாண தேசிகர் வேறு பத்து ஞான நூல்கள் இயற்றியருளினர். அவையாவன: தசகாரியம், சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத்தெளிவு, சித்தாந்தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாய நிட்டை வெண்பா, அதிசய மாலை, நமச்சிவாய மாலை என்பனவாகும். பாஷண்டநிராகரணம்என்னும்கண்டன'நூலொன்று இவரால் இயற்றப்பட்டதாகக் கூறப்படுகின்றது. பூப்பிள்ளை அட்டவணை என்னும் உரை நடை நூலும் இவர் இயற்றியதென்ப. இவருக்குப் பின் நாலு பட்டங்கள் கழிய மாசிலாமணி தேசிகர் என்பார் பண்டார சந்நிதியாக வீற்றிருந்த காலத்தில் திருநெல்வேலி ஈசானிய மடாலயத்தில் இருந்த ஈசானதேசிகர் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற சுவாமிநாததேசிகர் என்பவர் ஒரு தசகாரியம் இயற்றினார். அவரே இலக்கணக் கொத்துரை செய்தவர். மாசிலாமணிதேசிகர் காலத்திற்கு இரண்டு தலைமுறைகளுக்குப் பின் பெரிய பட்டத்திலும் சின்னப் பட்டத்திலும் பின் வேலப்பதேசிகர் என்னும் திருநாமமுடைய இருவர் எழுந்தருளியிருந்தனர். சின்னப் பட்டத்திலிருந்த பேரூர்த் தேசிகசுவாமிகள் பஞ்சாக்கரப்பஃறொடை என்னும் ஞான

நூலை இயற்றியருளினர். மரபட்டவணை, அநாதி பட்டவணை, வாருண பத்ததி மொழி பெயர்ப்பு, வாதுளாகம ஞான பூஜாவிதி மொழி பெயர்ப்பு முதலிய பல நூல்களுடன் அனுபோக வெண்பா என்னும் அருமையான நூலும் அவ்வாதீனத்து ஆன்றோரால் இயற்றப்பெற்றன வென்பர்.

ஸ்ரீமத் அம்பலவாணதேசிகர் செய்த பத்து நூல்களும், தக்ஷிணாமூர்த்திதேசிகர் இயற்றிய இரண்டு நூல்களும், ஈசானதேசிகர் செய்த தசகாரியமும், பேரூர் வேலப்ப தேசிகர் இயற்றிய பஞ்சாக்கரப்பஃறொடையும் பண்டார சாத்திரமெனப் பெரியோரால் வழங்கப்பட்டு வருகின்றன. திருவாவடுதுறை ஆதீனத்திலே ஞானாசாரியராய் வீற்றிருந்தருளிய பண்டார சந்நிதிகள் மூவராலும் தமது ஞானாசாரியரிடத்தே சங்காபிஷேகம் பெற்ற ஈசானதேசிகராலும் இந் நூல்கள் இயற்றப்பெற்றமையான் அவற்றிற்குப் பண்டார சாத்திரம் எனும் பெயர் ஏற்பட்டது. இவ்வரிய ஞான நூல்கள் மேலே கண்ட மெய்கண்ட சாத்திரவுண்மைகளைத் தெள்ளிதில் விளக்குவனவாதலின் சைவசித்தாந்த நூல் கற்பார்க்கு இப்பண்டாரசாத்திர உணர்ச்சி மிகவும் இன்றியமையாததாகும்.

இவற்றுள் அம்பலவாண தேசிகரியற்றியருளிய தசகாரியம், பாசஞானம், பசுஞானம், சிவஞானம் என்றவற்றினிலக்கணத்தையும், கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அவத்தைகளினியல்பையும், மாயையைச் சத்தியென்பதற்குக்காரணமும், தத்துவ ரூபம், தத்துவக்காட்சி, தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மக்காட்சி, ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் தசகாரியங்களினியல்பையும், சீவன்முத்தி, பரமுத்தி என்பவற்றின் வேற்றுமைகளையும், சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கும் பெருமையுடையது.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திதேசிகர் அருளிச்செய்த தசகாரியத்துள் சிவஞானபோதப் பன்னிரு சூத்திரக் கருத்துக்களின்

தொகுப்பும், தசகாரியச் சுருக்க விளக்கமும், சிவானுபூதிச் செல்வர் சிறப்பும் இனிது உணர்த்தப்படுகின்றன.

சுவாமிநாததேசிகர் தாமியற்றிய தசகாரியத்துள் அவத்தை பத்தினையும் உபதேசம் பெறுவதற்குமுன் ஐந்தென்றும், பின் ஐந்தென்றும் பகுத்து அவற்றின் தன்மை களைத் திட்பமாக விளக்கியுள்ளார். சித்தாந்த நூலினுட் போந்த 39 தத்துவங்களையும் இறுதியிற்றொகுத்துக் கூறி யுள்ளார்.

சன்மார்க்க சித்தியார் என்பது சைவசித்தாந்தத்துட் கூறிய ஞான நெறியின் இலக்கணத்தைச் சரியை, கிரியா யோக நெறியினின்னும் ஏனைச் சமயத்தார் கூறும் யோக நெறிகளினின்றும் பிரித்துச் செவ்விதில் விளக்குஞ் சீருடையது. சிவாச்சிரமத் தெளிவு என்பதனுள் துறவோர்க்குச் சிவதருமணி தீக்கையும், ஏனையோருக்கு உலக தருமணி தீக்கையும் உரியவென்பதைப் பல காரணங் கள் காட்டி ஆசிரியர் நிறுவுகின்றார். சித்தாந்தப் பஃறொடையுள் தக்க தலைவனாகிய ஞானாசிரியன்பால் தக்க தலைவியாகிய நன்மாணாக்கன் ஞானோபதேசம் பெறுமுறையை விரித்துரைக்கும் முகத்தான் சைவசித்தாந்த வுண்மைகள் யாவற்றையும் ஆசிரியர் இனிது விளக்கி யுள்ளார்.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திதேசிகர் தமது உபதேசப்பஃறொ டையுள் அவ்வாறே அரிய கருத்துக்களை அமைத்துத் தமது ஞானாசாரியருக்கு நல்ல சொன்மாலை புனைந்துள்ளார். சின்னப் பட்டத்துப் பின் வேலப்பதேசிக சுவாமிகள் செய் தருளிய பஞ்சாக்கரப்பஃறொடையும் அதன் ஆசிரியர் தமது ஞானாசாரியர் தமக்குச் சிவஞானம் விளக்கிய நன்றியைப் பாராட்டும் நன்மணிக்கோவையாக இலங்குகின்றது.

ஸ்ரீமத் அம்பலவாணதேசிகர் அருளிச் செய்த சித்தாந்த சிகாமணி யென்பது அகப்பற்று, புறப்பற்று நீங்கித் திருவருள்

நாடுதற்குரிய உறுதியைக் கடைப்பிடித்தற்குப் பெரிதும் பயன்படும் நற்கருவி நூலாக அமைந்துள்ளது. உபாய நிட்டை வெண்பாவென்பது பற்றற்றுத் தன்னையும், தலைவனையும் காணும் உபாய முறையைத் தெரிவிப்பது. நிட்டை விளக்க மென்பது சிவனடியே சிந்திக்கும் திருப் பெருகு சிவஞானச் செயலை இனிது விளக்குவதாகும். உபதேச வெண்பா என்பது மனந்தூயராகிச் சரியை, கிரியா யோகங்களிற் பயின்று ஞானம் கடைப்பிடிக்கும் முறை கூறுவதாகும். அதிசயமாலை என்பது தகுதியில்லாத தமக்குக் கூத்தப்பெருமான் குருமூர்த்தி வாயிலாக வெளிப் பட்ட அதிசயத்தை அம்பலவாணதேசிக சுவாமிகள் வியந்து கூறின துதிமாலை. நமச்சிவாயமாலை என்பது பேரின்ப அவாமேலீட்டினால் திருவுருப்பேற்றை விரும்பித் தமது ஞானாசாரியராகிய நமச்சிவாயமூர்த்திமீது பாடிய வாழ்த்து நூலாகும்.

அம்பலவாணதேசிகர் இயற்றியதாகக் கூறப்படும் பாஷண்டநிராகரண மென்றது இலிங்கதாரணம் செய்யும் வீரசைவர் சமயத்தை மறுக்கும் முகத்தான் கூறப்பட்ட தில்லைப்பெருமான் புகழ் மாலையாக விளங்குகின்றது. அநு போக வெண்பா வெண்பது சைவ சித்தாந்த உண்மைகளை அநுபூதியாற் கண்ட பெரியவர் ஒருவர் கூறும் அருள் நூலாக விளங்கும்.

இதுகாறும் கூறிப்போந்த பண்டார சாத்திரம் பதினான் கும் ஏனைய இரண்டு நூல்களும் அச்சியற்றப் பெறாமல் சைவசித்தாந்த நூல் வல்லார் சிலர்க்கு மாத்திரம் அரிதிற் பயன்படும் ஏடுகளில் மறைந்து கிடந்தன.

'நான்பெற்ற வின்பம் பெறுகவி வ்வையகம்'

என்னும் திருமந்திரக் கருத்துக் கிணங்க, இந்நூல்களை மிக்க உழைப்போடு எழுதுவித்து, அவற்றின் பல பிரதிகளையும்

பிழையற நன்கு ஆழ்ந்து, தமிழ் நாட்டினர் யாவருக்கும் ஞான அமுதமளிக்கும் வண்மையோடு அவற்றைச் சிறந்த அச்சுவாகனத்தில் ஏற்றி வெளிப்படுத்திய பெருமை இரு பெருஞ் செல்வமும் இயல்பினில் ஒருங்குபெற்று அவற்றின் உண்மைப் பயனைச் செவ்விதில் துய்க்கும் பெருங்குடிப் பெருந்தகையராகிய சீர்காழிச் சிதம்பரநாத முதலியார் அவர்களது இளவல் திருவாளர் சதாசிவ முதலியாரவர்கட்கும், அவருக்குத் துணை நின்று உதவும் கலைஞர்க்கும் உரியதாகும். தமிழ் நூல் போற்றுதலைச் சிறிதும் கருதாத இற்றைக்காலத்திலே பழுது படாமல் அரிய இவ்வருள் ஞான நூல்களை உலகிற்கு வெளிப்படுத்திய நல்லறி வாளர்களுக்கு ஒருவாறு இயற்றும் கைம்மாறாகச் சைவ நன்மக்கள் யாவரும் இவற்றைப் பெற்றுக் கற்று மகிழ்ந்து பெரும்பயன் எய்தும் வண்ணம் திருவருள் சுரக்குமாறு சிவமுழுமுதலை வேண்டுகின்றேன்.

40, எழும்பூர் இராஜவீதி
சென்னைப்பட்டணம்,
13—8—1925.

K. சுப்பிரமணியன்

உ

# சைவச் சடங்கு முறை

## (பொது)

இந்திய நாட்டிலே மக்கள் வாழ்க்கையிலே பிறப்பு நாள் முதல் இறுதி நாள் முடிய உள்ள காலப் பகுதியும் முக்கிய மான செய்திகள் நிகழும் போதெல்லாம் சமயத் தொடர் பான நெறிச் செயல் செய்விப்பது அவ்சியமான வழக்கமா யிருக்கின்றது. கிரியையினை ஆசிரியர் தொல்காப்பியனார் கரணம் என்றனர். எல்லாக் கரணங்களின் நோக்கமும் அவற்றைச் செய்வோரின் நன்மையின் பொருட்டு ஒரு கடவுளையாதல் அக்கடவுளின் அடியார்களாய பல தெய்வங் களையாதல் வாழ்த்தி வழிபடுதலே யாமென்க. நிறைமொழி களாகிய மந்திரங்கள் செப்பி உரிய கடவுளரை நினைந்து கரணங்கள் செய்தல் சிறந்த முறையென்ப. கரணங்கள் பொதுவெனவுஞ் சிறப்பெனவும் இரு திறப்படும். மந்திர மிகக்கலவாது செய்யுமுறை பொதுவெனவும், மந்திரத் தோடு விரிவாகச் செய்யுமுறை சிறப்பெனவுங் கருதப்படும். பொது முறையை இச்சிறு நூலுட் கூறுதும். இங்கே குறிக்கு முறையனைத்தும், விரிவாகச் சடங்கு செய்ய இயலாது உலக வாழ்க்கையிலீடுபட்டுச் சிவநெறி நிற்போர் பொருட்டு ஆசிரியனில்லா விடத்துச் சடங்கிற்குரியார் தாமே எல்லாம் நடத்திக் கொள்ளத்தக்க முறையிற் கூறப்பட்டுள்ளன. சைவநூல் நெறியிற்றிறம்பா மக்கள் இதனைக் குறை கூறாதிருப்பாராக.

ஒவ்வொரு சடங்கு நிகழ்தற்கு முன்னும், சடங்கு செய்தற்குரிய இடத்தை மெழுகி, கோலமிடுதலும், வாழை, மாவிலை, பூமாலை முதலியவற்றால் அழகு செய்தலும் பிள்ளையார், திருவிளக்கு, நிறைநாழி முதலியன வைத்து வழிபடுதலும், வழிபடுங் கடவுளர்க்குத் தேங்காய், வாழைப் பழம், சர்க்கரை, வெற்றிலை பாக்கு, செஞ்சோற்றுப் பொங்கல் முதலியன நிவேதித்தலும், இயல்பாகவே நடை பெறுகின்றன. செஞ்சோறென்பது, தவிடு நீக்காத பச்சரிசிச் சோறு. சடங்கின் துணைப் பகுதிகளை முதற்கண் விளக்கிப் பின்னர்ச் சடங்குகளை விவரமாகக் கூறுவாம். அவைகளாவன :

1. குறிக்கோள் பகர்தல் (சங்கற்பம்)
2. புனித நீரமைத்தல் (புண்யாகம்)
3. ஆவிலைந்தமைத்தல் (பஞ்சகவ்யம்)
4. காப்புக் கட்டுதல் (ரக்ஷபந்தனம்)
5. முளை வளர்த்தல் (அங்குரார்ப்பணம்)
6. குட வழிபாடு (கும்ப பூஜை)
7. நெருப்பு வழிபாடு (அக்கினி காரியம்)
8. வடிவ வழிபாடு (மூர்த்தி பூஜை)
9. கொடை (தானம்)

**குறிக்கோள் பகர்தல் (சங்கற்பம்) :** ஒரு சடங்கினைத் தொடங்குமுன், அதன்கண் மனம் பதிந்து நிற்கும் வண்ணம் இன்ன காலத்திலே, இன்ன இடத்திலே, இன்ன செய்தி செய்வல் என்று சொல்லிக் கொள்ளுதல் குறிக்கோள் பகர்தலாகும். குறிக்கோள் பகருமுன் 'சுக்லாம் பரதரம்' என்ற வடமொழிச் சுலோகத்தாற் கணபதியைத் துதிப்ப துண்டு. பிள்ளையார் வணக்கத்தின் பொருட்டுப் பின்வரும் தமிழ்ச் செய்யுளை இயம்புக.

**"திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்— உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனைமுகத்தானைக்
காதலாற் கூற்றவர் தங்கை."**

குறிக்கோள் பகருங்கால், காலத்தையும் இடத்தையும் விரித்துரைத்தல் பண்டை வழக்கம். பரமசிவன் கட்டளைப் படி, அயன் ஆயுளிலே இரண்டாவது பாதியிலே முதலாண்டு முதற்றிங்கள் முதல்நாளில் இருபத்தெட்டாவது நாலூழி யில் கலியின் முன் பகுதியிலே, நாவலந் தீவிலே மேருவிற்குத் தென்பாகத்திலுள்ள பரத கண்டங் குமரித் தீவிலே அறுப தாண்டுகளிலே இன்ன ஆண்டு, இன்ன திங்கள், இன்ன பக்கத்திலே, இன்ன நாளிலே, இன்ன சடங்கு செய்கின்றே னென்று விரித்துரைப்பது பழைய முறை. இக்காலத்திலே சுருக்கமான முறையிலே, இவ்வூரிலே ஒரு வீட்டிலே புண்யாக வசனம் போன்ற ஒரு கிரியையினைச் செய்வதாயிருந்தால், ஓங்கார வடிவாய் முழுமுதற் கடவுளருளினாலே, தவ மிக்க இத்தமிழ் நாட்டிலே சீர்மிக்க திருநெல்வேலி மாநகரென்னுந் திருப்பதியிலே, (திரு வேலாயுதம் பிள்ளையவர்கள்) வீட்டிலே மெய்கண்டான் ஆண்டு ஆனி மாதம் வளர்பிறைப் பக்கம் திங்கட்கிழமையன்று காலை நல்வேளையிலே, வீடு கூடுதற்குரிய எல்லாவகைச் சுத்தியின் பொருட்டும், குடும்பத் தின் எல்லாவகை நலங்களின் பொருட்டும், புனித நீர்ச் சுத்தியென்னுஞ் சமயச் செயலினைச் செய்கிறேன் என்று சொல்லிக் கொள்ளுதல் போதுமானது.

**புனிதநீர்ச்சுத்தி (புண்யாக வசனம்) :** உள்ளத்தையும் உடம்பையுஞ் சுத்திசெய்தலே புண்யாக வசனத்தின் நோக்க மாகும். நீரானது உடம்பைத் தூய்மை செய்வது வெளிப்படை. நீரிலே ஆக்கியளித்தழிக்குங் கடவுளுடைய ஆற்றலைப் பாவித்து, அதனைத் திருவட்பெருக்காகக் கருதி, அதனை உடம்பிலே தெளித்துக் கொள்ளுதலால், தீமை நீக்கமும் அகப்புனிதமும் ஏற்படுமென்பது முன்னோர் கொள்கை.

**புனிதநீர்க்கும்பம் வைக்குமுறை :** ஒரிடத்திலே பிள்ளையார், நிறைநாழி, விளக்கு முதலியவைகளைக், கீழ்த்திசை நோக்கி வைத்து வழிபாடியற்றிய பின் அவற்றிற்கு முன், உரிலைமீது அரிசியைப் பரப்பி அதன் நடுவில் எட்டிதழ்த் தாமரை வரைந்து அதன் மத்தியில் திருமகளைப் பூசித்து, அதனைச் சுற்றி நாற்புறமுந் தர்ப்பை யிட்டுக் கும்பம் வைக்க வேண்டும். சடங்கு செய்பவன் வடக்கு நோக்கி யிருக்கவும். கும்பத்தைக் கிழக்கு முகமாக வைக்கவும். கும்ப பூசையிற்கூறிய முறையிற் கும்பத்தை அமைத்து, அதன்மீது 'படைத்தளித்தழிப்ப மும்மூர்த்தி களாயினை' என்றியம்பி மலர் தூவி

**"தாவிமுதற்காவிரி நல் யமுனை கங்கை**
**சரச்சதிபொற்றாமரைபுட்கரணி தெண்ணீர்க்**
**கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த**
**குடந்தைக் கீழ்க் கோட்டத்தெங் கூத்தனாரே!"**

என்பதை ஓதி எழுநதித் தீர்த்தமும் கும்பத்துள் இருப்ப தாகக்கருதி மலர் தூவி, திருவைந்தெழுத்தை நூற்றெட்டுருச் செபித்து மலர் சாத்துக. பின்னர்

**"செக்கர் உளி பவள ஒளி மின்னின் சோதி,**
**செழுஞ்சுடர் தீ ஞாயிறெனச் செய்யபோற்றி"**

என்றோதிக் கும்பநீரை மாவிலையினால் எங்குந் தெளிக்க.

**ஆவிலைந்தமைத்தல் :** தூய பசுவிலுள்ள பால், தயிர் நெய், சிறுநீர், சாணம் என்னும் ஐந்தையும் ஓரளவிலே கலந்து நிறைமொழியோதி உட்கொண்டால், அது புனிதத் தைத் தருமென்பது நம்மவர் கொள்கை. தூய பொருள் களிலே மந்திர மொழிகளின் அதிர்ச்சி நன்கு பதியும். அப் பொருள்களை உட்கொள்ளுவார்க்கு மனத் தெளிவு ஏற்படும். சிறுநீரும் சாணமும் தொத்து நோய்நீக்குவதற்கும்

இடத்தைப் புனிதமாக்குவதற்கும் பயன்படுதல் யாரும் அறிந்ததே. இவ்விரண்டிற்குப் பதிலாகச் சந்தனத்தையும் பன்னீரையும் பயன்படுத்துவதுண்டு.

சடங்கு செய்யுமிடத்தின் தென்மேற்குத் திசையிலே ஒரு வாழையிலைலே அரிசியைப் பரப்பி அதில் நாற்கோணம் வரைந்து அதனைத் தர்ப்பைகளால் ஒன்பது சதுரமாகப் பிரித்து நடுச்சதுரத்தில் ஒரு பாத்திரத்திற் பாலை வைக்கவும் அதற்குக் கீழ்புறமுள்ள சதுரத்திலே, பாலிற் பாதியளவு தயிர் உள்ள பாத்திரமமைக்க. பாற்பாத்திரத்தின் தென் பக்கத்திலேயுள்ள சதுரத்தில், காற்பங்கு பசு நெய்யை ஒரு கிண்ணத்தில் வைக்கவும். பாலுக்கு வடக்குச் சதுரத்திலே ஆவின் நீர் காற்பங்கு ஒரு கிண்ணத்தில் ஊற்றி வைக்க. பாலுக்கு மேற்குச் சதுரத்திலே ஒன்று அல்லது இரண்டு மிளகு அளவு தூய சாணத்தை ஒரு பாத்திரத்தில் வைக்கவும். பாலிற்கு வடகிழக்குச் சதுரத்தில் தூய நன்னீரை ஒரு கிண்ணத்தில் வைத்து அதில் நறு மலரிட்டு ஒரு தர்ப்பை முடிச்சினையிடுக.

பாற்கிண்ணத்திலே ஓம் முதல்வ போற்றி
யென்றும்
தயிர்க்கிண்ணத்திலே ஓம் அண்ணலே போற்றி
யென்றும்
நெய்க்கிண்ணத்திலே ஓம் வெய்யாய் போற்றி
யென்றும்
ஆவினீர்க்கிண்ணத்திலே ஓம் தண்ணியாய்ப் போற்றி
யென்றும்
சாணக்கிண்ணத்திலே ஓம் தோன்றலே போற்றி
யென்றும்
நன்னீர்க்கிண்ணத்திலே ஓம் சிவனே போற்றி
யென்றும்

முறையே ஒன்று முதல் ஆறு தடவை கூறி மலரிடுக. அக் கிண்ணங்களை உள்ளங்கையால் மூடி அம்மந்திரங்களை நினைந்தெண்ணுக. பின் மேற்கு, வடக்கு, தெற்கு, கிழக்குத் திசைகளிலுள்ள கிண்ணங்களிலுள்ளவற்றை நடுப்பாத்திரத்திற் கலந்து நன்னீர்க் கலனிலுள்ள தர்ப்பை நீரையும் பாற்பாத்திரத்திலூற்றித் திருவைந்தெழுத்தை ஏழுமுறை அபிமந்திரித்து உட்கொள்ளுக. ஒரு பொருளை அங்கையால் மூடி நிறைமொழி பகர்தலே அபிமந்திரித்த லெனப்படும்.

''பாவமும் பழிப்பற்றற வேண்டுவீர்
ஆவிலைந் துகந்தாடு மவன்கழல்
மேவராய் மிகவு மகிழ்ந்துள்குமின்
காவலாளன் கலந்தருள் செய்யுமேஎன்னுந்''

திருப்பாட்டை ஓதி உட்கொள்ளலாம்.

**காப்புக் கட்டுதல் :** மணம், உபதேச முதலியவை நிகழுங் காலங்களிலே, திருவருட் பாதுகாப்பை நினைவுறுத்தற் பொருட்டும், எடுத்த காரியத்திற் கருத்தூன்றி அதனை நிறைவேற்றுதலைக் குறித்தற் பொருட்டும், ஆண் மக்கட்கு வலது கையிலும் பெண் மக்கட்கு இடது கையிலுங் காப்புக்கட்டுதல் சடங்கின் ஓர்உறுப்பாகும். பிள்ளையார்க்கு வழிபாடு செய்தபின் ஒரு பாத்திரத்திலே திருநீற்றை வைத்து அதன் நடுவிலே முடிச்சிட்டு மஞ்சள் பூசிய ஒரு நூற்கயிற்றை வைத்து அதனை உலகங்கள் பலவற்றையுந் தொடர்பு படுத்தி நிற்கும் அருளாற்றலின் வடிவாக நினைந்து

''பாடினம் பூகத்தினானும் பவளச் செவ்வாய்
வண்ணத்தானும்,
கூடிளமென் முலையா ளைக்கூடிய கோலத்தினானும்
ஓடிளவெண் பிறையானும் ஒளிதிகழ் குலத்தினானும்
ஆடிளம் பாம்பசைத்தானும் ஆரூரமர்ந்த அம்மானே''

என்னும் திருப்பாட்டை ஓதுக. பின்னர், சடங்கு நடத்துபவர் அதற்குரியவர் கையிலே நூலினைக்கட்டி முடியிடுக. அப்போது 'முக்கணா காப்பாய் போற்றி' யென்றியம்புக. 'பூசவினியது நீறு புண்ணியர் பூசும் வெண்ணீறு' என்று ஓதித் திருநீற்றை அணிவிக்க. காப்புக்கட்டின பின் ஆசாரமில்லாத செயல்கள் செய்தல் கூடாது. சடங்குமுடியும்வரை காப்பினை அவிழ்த்தல் கூடாது.

**முளை வளர்த்தல் :** தமிழ் மக்களுட் சிறந்த நாகரிகம் உழவை அடிப்படையாக உடைத்தாயிருந்தவையால், சிறப்பான சடங்குக் காலங்களிலே மட்கலங்கள் பன்னிரண்டு வைத்து, செந்நெல், பயறு, எள்ளு, வெண்கடுகு, உழுந்து, மொச்சை என்பவற்றின் விதைகளை அவற்றிலிட்டுப் பாதுகாத்து வளர்த்தல் சடங்கின் ஓர்உறுப்பாக நிகழ்கின்றது. இது இப்போது மணவினைக் காலத்திலே சிறப்பாக நடைபெறுகிறது.

மணமேடையில் வடக்குத் திக்கிலாவது வடகிழக்கிலாவது சாணத்தால் மெழுகி நாற்கோணஞ்செய்து அதன் மேல் அரிசியை இரண்டங்குல உயரம் பரப்பி, மேல்கிழக்காகவும் தெற்கு வடக்காகவும் அவ்வைந்து கோடுகள் வரைந்து பதினாறு சதுரங்கள் தோற்றுவித்து மத்தியில் நான்கு சதுரங்களில் நெல்லிட்டு, அதன்மேல் கும்பம் ஒன்று வைக்க வேண்டும். அதனைச் சுற்றியுள்ள பன்னிரண்டு சதுரங்களிலும் பன்னிரண்டு மண்பாலிகைகள் (கிண்ணங்கள்) வைத்து, அவைகளில், ஆற்றங்கரை, குளக்கரை முதலிய இடங்களிலிருந்து கணபதியை வணங்கி எடுத்துக் கொண்டு வந்த மண்ணையும் காட்டெரு முட்டைத்தூளையும் நிறைத்து வித்துக்களை இடவேண்டும். கும்பத்திலே பதினாறு கலைகளுடைய முழுமதிபோன்ற திருமேனியோடு உமையொரு பாகர் வீற்றிருந்து பயிர்களை வளர்ப்பதாகக்கருதி ஓம் அமுத முதல்வ போற்றி என்று மும்முறை சொல்லி மலர்தூவ வேண்டும். சுற்றியிருக்கும் பன்னிரண்டு விதைக்கிண்ணங்

களிலே பன்னிரண்டு கதிரவரின் ஒளிநிலவுவதாகப் பாவிக்க வேண்டும். கும்பத்தின் நீரை அடிக்கடி அவைகளிலே ஊற்றுதல் வேண்டும். கும்பத்தை, வேண்டும்போது, நிறைத்துக்கொள்ளுக. பாலிகைகளிலே பால் தெளித்தலும் உண்டு.

**பாரவன்காண் பாரதனிற் பயிரானான்காண்**
**பயிர் வளர்க்குந் துளியவன்காண் துளியில் நின்ற**
**நீரவன்காண்** —தேவாரம்

**''ஒன்றாயரும்பிப் பலவாய் விரிந்திவ் வுலகெங்கு**
**மாய் நின்றான்?''**

என்ற மறைப் பாடல்களை யோதுக.

சடங்கு முடிவிலே, கும்பத்திலே வீற்றிருக்கு முதல்வன் பூசனை புரிவாரது உள்ளத்திற் புகுந்ததாகக் கருதி இலை மாலை முதலியவற்றைக் களைக. இச்சடங்கு மங்களகாரியங் களிலேயே செய்யப்படும். பாலிகைகளில் முளைகள் நன்றா யிருந்தால், அது நல்ல அடையாளமென்று கூறுவார்கள்.

**திருக்குட வழிபாடு (கும்ப பூஜை) :** காண்கின்ற பொருள்களின் வாயிலாகக் கடவுளை வழிபடுதல் நம்மவர் வழக்கம். ஐம்பூதங்களிலே, மண், புனல், அனல் என்னு மூன்றுமே கண்ணிற்குப் புலனாவன். வடிவம் அமைத்து இறைவனை வழிபடுவது முதற்பூதம் வாயிலாக வழிபடு முறையாகும். கும்பம் வைத்து வழிபடுவது நீரின் வாயி லாகக் கடவுளை, வழிபடுமுறை ஓமஞ் செய்வது நெருப்பில் வழிபடுமுறை.

**கும்பபூஜை :** ஓரிடத்தைச் சுத்திசெய்து நாற்கோண மேடையிட்டு அல்லது நாற்கோணமாக மாப்பொடியாலு மஞ்சப் பொடியாலுங் கோலமிட்டு, அதன் மேல் ஒரு வாழையிலைமீது நெல்லும் அதிற்பாதியரிசியும் அதிற்பாதி

எள்ளும் ஒன்றின் மேலொன்றாக வைத்து அதன் நடுவிலே தாமரையிதழெழுதி அதன்மேல் கும்பம் வைக்கவேண்டும். கும்பத்திற்கு மூன்றிழையாலாகிய நூலினை வலப்பக்கத்தி லிருந்து இடப்பக்கமாகச் சுற்றி அதன் வாயில் மாந்தளிர், அரசிலை, தேங்காய் அல்லது பழம் என்பவற்றை வைத்துத் தேங்காய்மீது மூன்று அல்லது ஐந்து நுனித் தர்ப்பைகளின் முடிச்சினை அமைத்தல்வேண்டும். தர்ப்பையின் நுனிகள் மேல்முகமாகத் தோன்றும்படி முடிச்சிட்டிருத்தல் வேண்டும் கும்பத்தினுள்ளும் தர்ப்பை முடிச்சு பொன், மணி, வாசனைப் பொருள் என்பனவற்றை இயன்றவரை யிடுக. கும்பத்தின்மேலுள்ள தர்ப்பை முடிச்சாகிய கூர்ச்சத்திலே சந்தனம், குங்குமம், பூ முதலியன சாத்துக. எந்தக்கடவுளை வழிபடுகின்றோமோ, அந்தக் கடவுள் அக்கும்பத்தில் வீற்றிருப்பதாகக் கருதவேண்டும்.

**நெருப்பு வழிபாடு :** சுத்தமான இடத்திலே பச்சைநெல் உமியையாவது தூய மணலையாவது நாற்கோணமாக விரித்து, ஆல், அரசு, புரசு, மா, முருக்கு முதலியவற்றின் சிறு குச்சிகள் சிலவற்றை நெருப்புப் பற்றும்படி வைத்துக் கற்பூரத்தைக் கொளுத்தியிட்டு,

**சோதியே சுடரே சூழொளி விளக்கே**
**சுரிகுழற் பணைமுலை மடந்தை**
**பாதியே பானே பால்கொள் வெண்ணிறீற்றாய்**
**பங்கயத் தயனு மாலறியா**
**நீதியே செல்வத் திருப்பெருந்துறையி**
**னிறைமலர்க்குருந்த மேவியசீ**
**ராதியே யடியே னாதரித்தழைத்தா**
**லதெந்துவே யென்றருளாயே**

என்னு மந்திரங்கூறி, 'ஓமத்துள் அங்கியுள் உள்ளுள னெம்மிறை' என நினைந்து, சிவபெருமான் வீற்றிருப்ப தாகப் பாவித்துக்

**கற்பனை கடந்த சோதி கருணையே யுருவமாகி**
**அற்புதக் கோலநீடி யருமறைச் சிரத்தின்மேலாஞ்**
**சிற்பர வியோமமாகுந் திருச்சிற்றம்பலத்துள் நின்று**
**பொற்புட னடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றிபோற்றி**

என்னும் பாட்டையோதுக.

பின்னர், அத்தழலின் கண் எத்தெய்வத்தை வழிபட வேண்டுமோ, அத்தெய்வம் வீற்றிருப்பதாகக்கருதி அதற்கு 'உவமையாக' என்று நெய், பொரி, தானியம், சமித்து என்பவைகளைச் சிறிது சிறிதாக இடுக. ஓம முடிவிலே, நெய்த்தாரை விடுக. சடங்கு முடிவிலே, தழலில் வழிபடப் பட்ட கடவுளர் அகத்திலோமுங்கியதாகப் பாவித்து,

''தெள்ளத்தேறித் தெளிந்து தித்திப்பதோர்
உள்ளத்தேற லமுத வொளி வெளி''

என்றோதுக.

வடிவ வழிபாடு: சிவபெருமானையும் பிறதெய்வங் களையும் வடிவ வாயிலாக வழிபடும் விதிகள் ஆகம நூல் களில் விரித்தோதப்பட்டன. பூசனைக்குரிய இடத்தைப் புனிதமாக்கிப் பீடமிட்டு அதன்மேல் திருவுருவை எழுந் தருளச் செய்ய வேண்டும். வழிபடுவோன் தன்னையும், புனிதமாக்கித் தூயஆடை உடுத்துத். திருநீறணிந்து கொள்ளுதல் வேண்டும். புறப்பூசைக்குரியவற்றைச் சித்தப் படுத்திக்கொண்டு, முதற்கண்ட வழிபடுந்தெய்வத்தை மனதில் நினைத்து அகப்பூசை செய்தபின், அத்தெய்வம் புறத்தேயுள்ள உருவில்வந்த பூசை கொண்டருள்வதாகப் பாவித்து அத்தெய்வத்தின் திரு வடிவமுணர்த்தும் பாட்டை யோதுக. அறிவு நல்குந் தென்முகத்தெய்வத்தை வழிபடு வான்,

''சீதளப்பளிக்கு மேனியும் பளிக்குச்
செழுமலை பதித்த துப்பன்ன
பாதமுஞ் செவ்வாய் மலரு முக்கண்ணும்
பங்கயச் செங்காநான்கும்
வேதபுத்தகமு மமுத கும்பமும் விழிமணி
வடமு மெய்ஞ்ஞான
போதமுத்திரையுந் தாங்கிய தனி
மைப்போதன்முன் றாழ்ந்தெழுந்தேத்தா''

என்ற திருப்பாட்டைப் படிக்கலாம்.

விநாயகப் பெருமானைத் தியானிப்பதானால்,

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்தன்
நால்வாய் ஐங்காத்தன் ஆறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
றருமொரு வாரணத்தின் றாள்கள்
உருகோட்டன் பொடும் வணங்கி யோவாதே
யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன் றிருமால் செல்வமும்
ஒன்றோ வென்னச் செப்புந் தேவே.

என்பதை ஓதுக.

அகப்பூசை முடிந்தபின், தனதுள்ளத்தே நின்று புறத்தேயுள்ள உருவில் வந்து வீற்றிருப்பதாக வழி படுந் தெய்வத்தைக் கருதி, வடிவிலே கைந்நிறைந்த மலர் தூவிப் போற்றுக.

உள்ளத்து வள்ளலே
இடங்கொண்டருள்க
வடிவத்துறைக
அருளொளி தருக
உடையாய் போற்றி என்றுரைக்க.

## வழிபாட்டுப் பதங்களாவன.

**திருவடி விளக்குதல் (பாத்தியங் கொடுத்தல்) :** ஒரு கிண்ணத்தில் சந்தனங் கலந்த நன்னீர்விட்டு அது புனித மானதாகப்பாவித்து, வழிபடுங் கடவுள் திருவடி போற்றி யென இருமலரிடுக அந்நீரை அம்மந்திரங் கூறித் திருவுருவில் வீற்றுருக்குந் தெய்வத்தின் றிருவடிவிலே தெளிக்க.

**பருகு நீரளித்தல் (ஆசமன நீர் கொடுத்தல்) :** மற்றொரு கிண்ணத்திலே சந்தனங்கலந்த புனல்வார்த்து அதில் வழி படுங் கடவுள் பெயர்க்குரியவென்று மும்முறை மலரிடுக. அந்நீரை அத்தெய்வத்திற்குப் பருகுவாள் அளிப்ப, மலரி னால் நீரையெடுத்து விடுக.

**பனிநீர் தெளித்தல் :** மற்றொரு கிண்ணத்தில் சந்தனங் கலந்த நீரையூற்றி அதில் வழிபடுங் கடவுட்குவகையாக வென்று மும்முறை மலரிடுக. அந்நீரை திருவுருவின் சென்னி யிலே மலரினாற்றெளிக்க மூன்று கிண்ணங்கள் கிடையாத போது ஒரு கிண்ணத்திலேயுள்ள நீரைப் பயன்படுத்தலாம். அக்கிண்ணத்திலே பிரணவத்தை ஏழு முறைகூறி நீரை நிறை மொழிப்படுத்துக.

**திரு முழுக்கு :** பின்னர்; நறும் புகையும் நல்விளக்குங் காட்டி பழம் ஏதாவது பெருமானுக்கு நிவேதித்து, நீரும் நிவேதித்தபின், திருமுழக்குப் பீடத்திலே பெருமானை எழுந்தருள்வித்து, மஞ்சட்பொடி, மாப்பொடி, பஞ்சா மிர்தம், நெய், பால், தயிர், தேன், பழச்சாறு, இளநீர், சந்தனம், பூநீர் முதலியவற்றினால் திறுமுழுக்காட்டுக.

**கவினுறுத்தல் :** திருமுழுக்கு முடிந்தபின், திருவடிப் புனல், பருகுபுனல் அளித்துத் திருவொற்றாடை சாத்தி, பெருமானைப் பூசையிடத்திலே எழுந்தருளப் பண்ணி,

திருநீறு, சந்தனம், குங்குமம், மலர்மாலை, அணி முதலியன சாத்துக.

**படைத்தல் :** திருவமுது, தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, தண்புனல் முதலியன படைத்தளிக்க நறும்புகை, நல்விளக்கு, ஒளிநிரல், சூடன் ஒளி முதலியன பணிமாறுதல், பின்னர் நிகழ்தற்பாற்று.

**மலர்தூவிப் போற்றுதல் (அர்ச்சனை) :** பெருமானுக்கு அர்ச்சனை செய்ய விரும்புவோர், பெருமான்றிருப் பெயரோடு போற்றியென்பதைச் சேர்த்த மந்திரத்தாலும், தேவார முதலியவற்றாலுள்ள அர்ச்சனை பதிகங்கள், திருவாசகத்திலுள்ள அர்ச்சனையகவல்கள் முதலியவற்றாலும், மலர்தூவிப் போற்றுக.

**வாழ்த்து (தோத்திரம்) :—** தேவார முதலிய திருவருட் பாக்களை இசையுடன் ஓதி, வலம் வந்து, கையாலும், மெய்யாலும் வணங்குக.

**வேண்டுகோள் (பிரார்த்தனை) :—** வழிபடுவோர் விரும்பியதைப் பெருமான்பால் வேண்டுக.

உருவெண்ண விரும்புவார், பெருமானது திருநாம மந்திரத்தை இயன்ற அளவு விழி மணி மாலை கொண்டு எண்ணுக. பூசை முடிவிலே, பூசையில் நேரிட்ட பிழைகளைப் பொறுக்கும்படி பெருமானை வேண்டிக் கொண்டு, திருவுருவம், நிலைபேறிலதாயின் உள்ளெழுந்தருள்க போற்றி, என்றுரைத்து, வழிபாடியற்றப் பெற்ற கடவுள் தனதுஅகத்துட் புகுந்ததாகக் கருதுக. பின்,மண்முதலியவற்றாலாய திருவடிவத்தைத் தீர்த்தத்திலே சேர்க்கவும்.

**தானம் :—** சடங்குக் காலங்களிலே, தக்கார்க்கும், வறியார்க்கும் வேண்டிய பொருள்களை நன்கொடையாகக்

கொடுத்தல் ஒரு வழக்கம். ஒருவன் தனது வாழ்நாளிலே பொருள் வளம் தனக்கு ஏற்பட்டபோதெல்லாம், வறியவர்க்கும், கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த தக்கார்க்கும், பல் வகைப் பொருள்களையும் கொடுத்துதவுதல் பெரும் புண்ணியமே, அங்ஙனஞ் செய்ய இயலாதார், சிறப்பான சடங்குக்காலங்களிலே அத்தகைய கொடைகளையியற்ற வேண்டுமென்பது நமது முன்னோர் கருத்து. இக்காலத்திலே மிகுதியும் அறுபதாண்டின் நிறைவிலாவது எண்பத்து நாலாவதாண்டின் நிறைவிலாவது ஆயுசு முடிவிலாவது தானஞ் செய்தல் வழக்கமாயிருக்கின்றது. பழம், வெற்றிலை, பாக்கு, திருநீற்றுப்பை, உருத்திராக்கம், விளக்கு, குடை, செருப்பு, எள்ளு, உப்பு, படுக்கை, தண்ணீர்ப் பாத்திரம், உடை, வைக்கோல், நெய், எண்ணெய், பசு, பொன், மணி, நிலம் முதலியவற்றை அவை இல்லாதார்க்கு இயன்ற வரை கொடையாகக் கொடுத்தல் சிறந்த அறச் செய்கையே. தானப் பொருள்கள் பலவற்றையும் ஒருவரை வாடகைக்குக் கொணரும்படி செய்து போலித்தானஞ் செய்வதிலும், கொடையாதுஞ் செய்யாமை நல்லது. தனது வருவாய்க்கேற்ப, ஒருவன், ஏதாவது ஒரு கொடையியற்றினாற் போதுமானது. அடியார்க்கும் உறவினர்க்கும் பொருளுதவி செய்தல் நலம். செல்வர்கள் கலாசாலையமைத்தல், நூல் நிலையங்கள் நிலையிடுதல், பொதுவான சத்திரம் அமைத்தல், ஆதரவற்ற பிள்ளைகளுக்கு விடுதியமைத்தல், வேலையில்லாருக்கு வேலை கொடுத்தல், கொடுப்பித்தல், மருத்துவச் சாலையமைத்தல், கைத்தொழில் சாலையமைத்தல் முதலிய அறங்களிலே, ஒன்றையோ, பலவற்றையோ, இயற்றுதல் இற்றைக் காலத்திற்குப் பொருந்துவதாகும்.

இனி, சடங்குகளைக் கூறத்தொடங்கி, முதலில் மணச் **சடங்கினைத்** தெரிப்பாம்.

திருமண மேடைமேல், பிள்ளையார், திருவிளக்கு, நிறைநாழி, புனிதநீர், ஆவிலைந்து, முளைப்பாலிகை, சிவ கும்பம்,

முதலியன அமைத்துச் சடங்கு செய்விப்பார். அவற்றிற் குரிய வழிபாடியற்றிய பின், மணமக்களையும் அவர் பெற்றோரையும் வருவித்து, அவர்கள் மீது புனிதநீர் தெளித்து ஆவிலைந்து உட்கொள்வித்து, அவர்களைத் தனித்தனியே பிள்ளையார், திருவிளக்கு, நிறைநாழி, ஆவிலைந்து, சிவகும்பம் என்பவற்றை மலர் தூவிப் போற்று மாறு செய்க.

1. ஓங்கார முதல்வனே போற்றி
2. ஒளிவார் விளக்கே போற்றி
3. நிறை செல்வ அமுதே போற்றி
4. ஆவிலைந்துகப்பாய் போற்றி
5. சிவபரம் பொருளே போற்றி

என்பவற்றை மலர்தூவுங்கால் ஓதுவிக்க பின்னர், அக் கடவுளார்க்கு, தேங்காய், பழம் முதலியன உண்பித்து நறும் புகையெடுத்து, நல்விளக்குக் காட்டி சூடன் பணிமாறுக. பிள்ளையார் நிகழுந் திருமணச் செய்திகள் யாவும் இனிது முடிவித்தருளுமாறு வேண்டுகோள் செய்விக்க.

பின், நெருப்பு வழிபாடு இயற்றுவான், 'மாதொரு பாகனாகிய மணாளர்க் குவகையாக' என ஐந்து முறை, நெய், தானியம், சமித்து என்பவற்றால் ஆகுதி செய்க.

மணமகன் தந்தை பிதிர் வழிபாடு செய்தலுமுண்டு.

பின், மணமகனது மாமனாரும் கன்னிப்பெண் ஒருத்தியும் வந்து முளைதெளிக்க முளைதெளிப்பவர்கள் 'அமுத முதல்வனே, நற்பயிர் போல, மணமக்கள் வளர்ச்சியடைய அருள் புரிக' என்றியம்புக.

மணமகனுக்குக் காப்புக் கட்டுக. ஐந்தெழுத்து, ஆடை கொடுக்க. மணமகளும் அவள் பெற்றோரும் மணவறைக் கடவுளரை வழிபடுக.

(மணமகள் தந்தை பிதிர்வழிபாடு)

மணமகளும் அவள் மாமனாரும் கன்னிப்பெண்ணும் வந்து முளைதெளிக்க.

மணமகனுக்குக் காப்புக் கட்டுக. ஐந்தெழுத்து ஓது விக்க ஆடை கொடுக்க.

(மணமகள், வீட்டினுள் நாட்பானை ஏறவைத்தல், கலப்பருப்பிடுதல் நிகழற்பாலன)

நாட்கால் நடுதல்.

மணமகளை ஊஞ்சலிலும், மணமகனை எதிராக ஒரு இருக்கையிலும் அமர்வித்து திருவாசகம், பொன்னூஞ்சல் முதலிய ஊஞ்சற்பாட்டுப் பாடுக.

அப்போது சடங்கு செய்விப்பார் திருமங்கல நாணிற்கு மலருங் குங்குமமுஞ் சாத்தி வெற்றிலை பாக்கு நிறைந்த தாம்பாளமொன்றிலிட்டுப் பெரியரால் தொட்டு வாழ்த்துதல் பெற்று வைத்துக் கொள்ளுக.

ஊஞ்சல் முடிந்த பின், மணவறைக்கு மணமக்கள் வந்ததும், சடங்காசிரியர் அவர்கள் ஒருவரையொருவர் மணப்பதற்கு இணக்கமுடையாரென்பதை உசாவித் தெரிக. பின்,

**மகட்கொடை :—** மணமகளுடைய தந்தை, உடன் பிறந்தார், மாமனார் முதலியவர்களுள் ஒருவர் மணமகள் கையை மணமகன் கைமேல் வைத்தும் பொன்னுடன் நீரை வார்த்து, மணமகளை மணாளனுக்கு அளிப்பதாகக் கூற வேண்டும். மணமகள் தந்தை 'யானும் என் மனைவியும், எங்களருமை மகளாகிய (இன்ன பெயருடைய) இவளை இறைவன் திருவுள்ளப்படி இன்ன ஊர் இன்ன பெயருடைய மணமகனாகிய உங்களுக்கு வாழ்க்கைத்துணையாக உள்ளும் புறமுமொத்துக் கொடுக்கிறோம். நீவீர் இருவரும் என்றும் நிலைத்த அன்பும் அறனுமுடையாய்ப் பிரிவின்றி நீடூழி இனிது வாழ்க' என்றியம்புக. (மணமகளைக் கொடுக்கும் பிறரும் தங்கள் முறைக்கேற்றவாறு சொற்களை இசை

வித்துக் கொள்ளுக.) பின் மாலையிடுதல் நிகழ்தற்பாற்று மணமகள் மணமகனுக்கு மாலையிடுங்கால், ''இல்லற வாழ்க்கைக்கு இன்னுயிர்த் துணையாகத் தங்களைப் பெறு கின்றேன். தங்கள் மனம் நோவ எச்செயலையும் யான் செய்யாதிருக்கவும், உடலுமுயிரும் போலவும், கண்ணுமிமை யும் போலவும், அமுதஞ்சுவையும் போலவும், இருவேமும் வாழ்ந்தின்புற்று அறநெறி நிற்குமாறு அருள் செய்யும் வண்ணம், மாதொருபாகனை வேண்டி இம்மாலையைத் தங்களுக்கு இடுகிறேன்'' என்றியம்புக. பின்,

**திருமங்கல நாண்பூட்டு :—** மணமகன் உடன் பிறந்தா ளுதவியோடு, திருமங்கல நாணினைச் சடங்காசிரியரிட மிருந்து வாங்கி மணமகள் கழுத்திற் பூட்டுக. பூட்டுங்கால், மணமகளை நோக்கி, நீ மாலையிடுங்காற் செப்பிய வண்ணமே, என்றும் நாம் ஒற்றுமையாய் இன்புற்று இல்லறம் நடத்தி வாழ, இறைவன் அருள்புரியும் வண்ணம், அவனை வணங்கி இத்திருநாணைப் பூட்டுகின்றேன் என்று மொழிக. அப்போது 'குவளைக் கண்ணி கூறன் காண்க' என்று சடங் கினர் கூற, பிறர் 'அவளுந்தானுமுடனே காண்க' என எதிர் மொழி பகர்க. பின்னர், மாலைமாற்று நிகழ்க, கண்ணேறு கழிக்க பின், அறிவுரையும் ஆசியும் சடங்கியற்று வார் கூறுக :—

**''மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்**
**எண்ணில் நல்லகதிக் கியாதுமோர் குறையிலைக்**
**கண்ணில் நல்லஃதுறுங் கழுமலவளநகர்ப்**
**பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகையிருந்தே''**

என்பதை ஓதி, மணமகனை நோக்கி, "பொதுமறை விதித்த வாறே, திறனறிந்து தீதின்றி வந்த பொருளைப் பகுத்துண்டு பல்லுயிரோம்பிப் பிறனில் விழையாது பீடு பெறுக" எனவும்,

மணமகளை நோக்கி, "கணவன் வளத்திற்குத் தக்கவாறு வாழ்க்கை நடத்தித் தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாது திகழ்க" எனவும்.

மணமக்களை நோக்கி, இருவரும் நீடூழி இன்ப வாழ் வெய்தி நன்மக்கட்பெற்று, இனியவை சொல்லுதலும் பயனில சொல்லாமையும், செய்ந்நன்றியறிவும், நடுநிலையும், அடக்கமும், ஒழுக்கமும் பொறையும் வாய்மையும் அகத் தூய்மையுமுடையராய் வாழ்ந்து, தமிழ் மணங்கமழுஞ் சைவந்தழுவி, ஆல்போற்றழைத்து, அறுகுபோல் வேரூன்றி, மூங்கிலன்ன சுற்றம், முசியாமல் வாழ்வோங்கிப் பல்லாண்டு வாழப் பானருள் புரிக எனவு மொழிந்து மணமக்கட்குத் திருநீறிடுக. அவர்கட்குப் பிறபெரியாருந் திருநீறு பூசுக. பெரியார் ஆசி முடிந்தபின், மணமக்கள் கைபிடித்துத் திருவனலைச் சுற்றி வந்து மும்முறை அதன்கட் பொரியிடுக பொரியிடுவார், திருவருள் வழிநின்று அறம், பொருள், இன்ப நெறி பற்றி யாங்கள் செய்வன உமையொரு பாகனுக்கு 'உவகையாக' என்றியம்புக.

பின், மணமக்கள் மனைபுகுந்து பால் பழம் உட்கோட லும், மங்கலப்பெண் வாழ்த்தும் நடைபெறுவன்.

மணம் நிகழும் நாள்களிலே, காலையுமாலையு மணமக்கள் மணமேடைக்கு வந்து, கணபதி வழிபாடு ஆகுதி முளையில் நீர் தெளித்தல் முதலியவற்றைச் செய்து திரு நீறணிதலும் உண்டு.

மணமக்கட்குத் திருநீறு பூசியபின், சடங்கு செய்வார். ஒரு தர்ப்பைப் புல்லை ஓமநெருப்பிற் சுட்டெடுத்து, ஒரு மாவிலையில் வைத்து அவிசொரியும் நெய்த் துளிவிட்டுக் குழைத்து மணமக்கள் நெற்றியிற் றிலகத் தீட்டுதலுமுண்டு.

மணநாள் கழிந்தபின், காப்பவிழ்த்து, மணவறைக் கடவுளரை உள்ளத்திலொடுக்கிய பின், நிறைநாழி முதலிய வற்றை உரிய இடங்களிற் சேர்த்தலும் முளைகளை நீரில் விடுதலும் நிகழற்பாலன.

திருக்கோயிலின் கண் திருமணம் நடைபெறுவதாயின், இறைவன் இறைவியர்க்கு வழிபாடியற்றிப் பெருமான்

திருவடியில் வைத்தெடுத்த திருமங்கல நாணை மணமகன் மணமகள் கழுத்திற் பூட்டுதலும் பெரியோர் ஆசி கூறுதலும், மணமக்கள் ஓர் ஊர்தியில் மணவீட்டிற்குச் செல்லுதலும் நிகழ்வன.

**பூப்புச்சீர் :—** பெண்களுக்கு முதற்பூப்பு நேரிட்டபின், நல்ல வேளையில், விநாயகர் வழிபாடு, புனிதநீரமைத்தல் ஆவிலைந்து கூட்டுதல் முதலியன நிகழ்த்திக் கும்பபூசையிற் கூறியவாறு சந்திரகும்பம் வைத்து அமுத முதல்வனை அதன் கண் பூசித்துத் திருவைந்தெழுத்தை நூறு உருவெண்ணி, பூப்புப் பெண்மீது புனிதநீர் தெளித்து, ஆவிலைந்து குடிப்பித்து, கும்பநீரிலே முழு குவிக்க. நெய் கலந்த பாலை உண்பித்தலும் விதிக்கப்பட்டிருக்கிறது.

மணமக்கள் தம்முட்சேருங்கால் சிவமுஞ்சக்தியும் தம்மை இயக்குவதாகப் பாவிக்க.

**கருச்சீர் :** கருத்தரித்து ஒரு திங்கள் கழிந்தபின், கரு நிலைத்தற் பொருட்டு இறைவனை வழிபடுதலும், இரண்டாந்திங்களில், மாதொரு பாகனை வழிபட்டுச் சூலிக்குக் கோதுமை உளுந்து முதலியன கலந்த நெய்யுணவு, பாலுணவுகளைக் கொடுத்தலுமுண்டு.

**கருமுதிர்வு :** சீமந்தமானது கருத்தரித்து நான்கு, ஆறு அல்லது எட்டாவது திங்களில் நடைபெறுதற்குரியது. அப்போது ஒன்பது கோள்களுக்கு வழிபாடியற்றுவதும், முட்பன்றிமயிர், தர்ப்பை, அத்திக்குச்சு முதலியவற்றால் சிவமந்திரஞ் சொல்லி நாயகன் சூலிக்குத் தலைவகிர்ப் பெடுத்தலும், அறுகும், மஞ்சளரிசியுங் கலந்து முழங்கால், தொப்புள், மார்பு, நெற்றி, சிரசு என்னுமிடங்களில் அதனைத் தெளித்தலும், மணமகள் வயிற்றைத் தொட்டுச் சிவமந்திரம் உச்சரித்தலும், சூலிக்கு வளையலிடுதலும் நிகழ்வன. ஆல், அரசு, முருக்கு, அத்தி என்பவைகளின் மொட்டுக்களை நெய் கலந்த பாலுடனமைத்து அதனை

வடித்தெடுத்த சாற்றினை மனைவியின் நாசியிற் பிழிதலும் உண்டு.

இறையெல்லாம், கருவானது வளம்படுதற் பொருட்டுச் சூலியின் உடலை மிக்க சூடிலதாகவும், சத்துடையதாகவுஞ் செய்தற் பொருட்டு நிகழ்வன்வென்ப.

பிறப்புச்சீர் : குழந்தை பிறந்தவுடன், பிறந்த இடத்தின் மருங்கு சுத்தத்தின் பொருட்டு, எள்ளுப்பொடியினாலும், வெண்கடுகுப் பொடியினாலும் புகையிடுதலும், குழந்தையின் தந்தை நீர் மூழ்கித்திருநீறிட்டுக் கணபதியை வழிபட்டு, எல்லாவற்றையும் புனிதமாக்குஞ் சிவத்தினது செவ்வொளி வடிவைச் சிறிது நேரம் மனமொன்றி நினைத்திருந்து, குழந்தை முகத்தைப் பார்த்து,

குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற்
குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற்
பால்வெண் ணீறும்
இனித்தமுடைய எடுத்த பொற்பாதமுங்
காணப் பெற்றால்
மனிதப்பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே

என்னுந் திருப்பாட்டைப் பாடுக. கொடியறுத்தபின், ஐம்முகக்கடவுள் திருமேனியை நினைந்து நிறைகுடநீரால் குழந்தையை முழுக்காட்டி பாதுகாப்பின் பொருட்டுத் திருவைந்தெழுத்தோதித் திருநீறிடுக. வறியார்க்கும் தக்கார்க்கும் உணவு அளிக்க குழந்தையின் தாய்க்குக் கடவுளுக்குப் படைத்த தேன், நெய், சர்க்கரைக்கலவைகளைக் கொடுக்கலாம்.

**காது குத்தல்** : குழந்தை பிறத்த பத்தாம் நாள் அல்லது பன்னிரண்டாம் நாள் அல்லது பின்னர் ஒரு மாதத்திற்குள், கடுக்கன் அணிதற்பொருட்டு, காதுகுத்தல் நிகழற்பாலது.

அப்போது பிள்ளையார், நிறைநாழி, திருவிளக்கமைத்து வழிபாடியற்றிச் சர்க்கரை கலந்த பச்சரிசியை நிவேதித்தல் மரபு.

**தாய்வீடு கூடல் :** கொப்பூழ்க் கொடியறுக்கும் வரை, கருப்பத்திற் குழந்தை இருக்குங் காலத்திற்போலச் சூதகம் இல்லை. சூதகம் நீங்கும் நாளில், இடங்களையும் பாத்திரங் களையுஞ் சுத்திசெய்து, புனிதநீர்ச்சுத்தியின்பின் ஆவிலைந் தைப் பெற்றோரும் குழந்தையும் பருகுதல் வேண்டும். ஒரு மண்மடக்கில் அல்லது உலைமுடியில் திருவைந்தெழுத்தோதி யமைத்த நீரினை உட்கொள்ளுதலுமுண்டு, குழந்தைக்குக் காப்பிடுதல் வழக்கம்.

**பெயரிடுதல் :** குழந்தை பிறந்த பத்தாம்நாள் அல்லது பன்னிரண்டாவது நாள் அல்லது பிறிதொரு நன்னாளிலே, சிவபெருமானுக்கும் அடியார்க்கும் பிதிர்களுக்கும் முனிவர் களுக்கும் வழிபாடியற்றிக் கடவுட்பெயர், அடியார் பெயர், பெற்றோரின் பெற்றோர் பெயர், என்பவற்றுள் ஒன்றைக் குழந்தைக்குப் பெயராக இட்டு ஆசிரியரும் தந்தையும் பிறரும் அழைக்கற்பாலர். அப்போது ஆசிகூறித் திருநீறிடுக. பெண் மகவிற்கு உமையம்மையின் திருநாமங்களையும், மென்மையும் பண்பும் அன்பும் உணர்த்தும் பெயர்களையும் இடுதல் வேண்டுமென்பது சைவநூற் கருத்து.

**வெளிக்கொணர்தல் :** குழந்தை பிறந்த நான்காவது மாதத்திலே வெளிக்கொணர்தல் என்னுஞ் சடங்கு நிகழ்தற் பாலது. அப்போது கணபதியையும் பிதிர்களையும் வழிபட்டு, பகலவன் கதிர்கள்படும் இடமொன்றில் மெழுக்கிட்டு மணலால் மேடை செய்து அதன்மேல் அரசிலைகளை வைத் துக் கதிரவனையும் கதிரவன் நடுவில் உள்ள உருத்திரமூர்த்தி யையும் வழிபட்டுச் செம்மலர் தூவிப் போற்றிச் சர்க்கரைப் பொங்கல் படைக்கவும்.

குழந்தையை அதன் தாய்மாமனார் நல்வேளையில் வெளியே எடுத்துக் கொண்டு வரவேண்டும் பிள்ளைக்குப்

பெரியோர் ஆசிகூறுக. பிள்ளைக்கு மூன்றாமாதத்திலே கதிரவனையும் நான்கா மாதத்திலே திங்களையுங் காட்டுதல் வேண்டும்.

இதுவுமன்றி, பிள்ளையைத் திருக்கோயிற்கெடுத்துச் சென்று, அறவடிவாகிய நந்திக்குப்பின் நின்று

''தோடுடைய செவியன்'' என்னுந் தேவாரமோதிப் பிள்ளைக்குச் சிவவடிவங் காட்டுதலுமுண்டு.

**பாலுணவு கொடுத்தல் :** குழந்தை பிறந்த ஆறாவது அல்லது எட்டாவது திங்களிலே நல்லதொரு நாளிலே சிவ பெருமானுக்குப் படைத்த பாயத்தைக் குழந்தைக்கு ஒரு சிறிது ஊட்டுக. அப்போது,

**'அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம்'**

என்பதை ஓதுக. சோறுண்பித்தற்கு முற்பட்ட மாதங்களில் குழந்தைக்கு நீர்வடிவான உணவே கொடுத்தல்வேண்டும். ஆறாவது மாதத்திலே நெகிழ்ந்த உணவும், பத்தாவது மாதத்திலே திண்ணிய உணவும் கொடுத்தற்குரியன.

**பிறந்தநாட் கொண்டாட்டம் :** ஓராண்டு முடிவிலே, பிள்ளையைப் புனிதநீரிலாட்டுவித்து, ஆவிலைந்து கொடுத்து, பிள்ளையாரையும் அம்மையப்பரையுஞ் சிறப்பாக வழிபாடு செய்வித்து சாவை நீக்கு மறைத்தலைவராகிய மிருத்தியுஞ்சய தேவராகிய தென்முகப் பரமாச்சாரியரையும், சாவா வரம் பெற்ற மார்க்கண்டரையும், பிறந்தநாட் தேவதையாகிய நட்சத்திர தேவதையையும் வழிபடுதலு முண்டு. ஆயுள் ஓமஞ் செய்தல் சிறப்பு விதி.

குழந்தைக்குப் பெரியோர் ஆசிகூறித் திருநீறிடுதலும், வறியவர்க்கும் அடியார்க்கும் உணவளித்தலும் நிகழற்பாலன.

**முடியெடுத்தல் :** மூன்றாம் ஆண்டிலே நல்லதொரு நாளிலே புனித நீரமைத்து அதனைக் குழந்தைமேல்

தெளித்து, வெந்நீரினாலே தலைமுடியை நனைத்துக் குழந்தையின் தந்தையாவது ஆசிரியனாவது தொட்டுக் கொடுத்த கத்தியைக் கொண்டு, மயிர்வினைஞன், குழந்தை தலையின் முன்மயிர் கழிக்க, பின், குழந்தையை முழுக் காட்டித் திருநீறணிவித்து ஆசி கூறுக.

**கல்வித் தொடக்கம்** : வடகீழ்த்திசையில் புனிதநீர் ஆவிலைந்து முதலியன அமைத்துக் கிழக்கு நோக்கிச் சதாசிவமூர்த்திக்கும் ஒரு கும்பம் அமைக்க. அதற்குக் கிழக்கு முதல் வடகிழக்கு வரை உள்ள திசைகளில் முறையே திருமால், திருமகள், அயன், கலைமகள், கணபதி, வருணன், சண்முகர், தென்முகத் தெய்வம், எழுத்தின் மூலதேவதை என்போர்க்குக் கும்பம் வைத்து வழிபடுக. சதாசிவமூர்த்தி திருமுன்பு,

கற்றவர் விழுங்குங் கற்பகக்கனியைக்
கரையிலாக் கருணைமாகடலை
மற்றவரறியா மாணிக்கமலையை
மதிப்பவர் மனமணிவிளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழிமிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண்டுள்ளங்
குளிரவென் கண் குளிர்ந்தனவே.

என்னுந் திருப்பாட்டையோதி, அரிசியைப் பரப்பி அதன் கண் விந்துவடிவாய அன்னையை வணங்கிப், பிரணவத் தோடுகூடிய திருவைந்தெழுத்தை முன்னும் நெடுங்கணக்கின் எழுத்து வரிசையைப் பின்னுமாகக் குழந்தையைக் கையைப் பிடித்து மும்மூன்று முறை எழுதுவித்தல் வேண்டும். எழுத்தறிவிக்கும் ஆசிரியனுக்கு உடை பொருள் முதலியன கொடுக்கவும். தக்கார்க்கு உணவளிக்க.

ஐந்தெழுத்தோதுவித்தல், திருநீறிடுவித்தல், ஐந்து, ஏழு, ஒன்பது, பதினாறாவது ஆண்டுகளிற் பூணூலணிதலும், சமயமந்திரங் கேட்டலாய தீக்கையும் விதிக்கப்பட்டுள்ளன,

ஆகமமுறையிலே தீக்கை செய்விக்க இயலாதவர்கள் திருவைந் தெழுத்தினைப் பொது முறையாதவேனும் குழந்தைகட்குப் போதித்தல்வேண்டும். கணபதியை வழிபட்டு ஓங்காரத்தை உச்சரிக்கும்படி குழந்தைக்குக் கற்பிக்க வேண்டும். சிவபெருமானது திருமுன்பு திருவைந்தெழுத் தினைப் பல்லாயிரமுறை பயின்ற பெரியாரைக்கொண்டு குழந்தைக்குத் திருவைந்தெழுந்தை ஓதுவித்துக்

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத நாமம் நமச்சி வாயவே"

என்னுந் திருமந்திரங் கூறிச் சிவசிவவென்று திருநீறணியு முறையையுங் கற்பிக்க வேண்டும். திருவைந்தெழுத்திற் குரிய தமிழ் முனிவராய அகத்தியனாரை வழிபட வேண்டு மென்பாருமுளர்.

இவ்வைந்தெழுத்துபதேசம் நிகழுங் காலத்திலே சிவபெருமானை வழிபடுமுறையும் எவ்வுயிர்க்கும் இரங்குங் கடமையும், பிதிர்கள், தெய்வங்கள், குருமார், பெற்றோர், உறவினர், நண்பர், அயலவர் முதலியோர்க்குச் செய்யுங் கடமைகளும், கற்பிக்கப்படவேண்டுமென்பது சைவநூற் கருத்து. உபதேசம் பெற்ற நாள் முதல், காலை, நண்பகல், மாலை என்னும் பொழுதுகளில் தவறாது திருநீறணிதலும், இயன்ற அளவு திருவைந்தெழுத்தை உருவெண்ணுதலும் சிவ வழிபாடியற்றுதலும் வற்புறுத்தல் வேண்டும்.

சொற்றுணை வேதியன் சோதிவானவன்
பொற்றுணைத் திருந்தடி–பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சி வாயவே.

என்னுந் தேவாரத்தையுங் கற்பிக்கவும்.

**மந்திரமாவது நீறு வானவர்மேலது நீறு**
**சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு**
**தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு**
**செந்துவர் வாயுமை பங்கன் திருவாலவாயான்**
**திருநீறே**

கல்வி பயிலுங் காலத்திலே ஐம்பொறியடக்கம் பிள்ளைகளுக்கு இன்றியமையாது வேண்டப்படும். அதனையே சிறந்த நோன்பாய்ப் பெரியோர் விதித்திருக்கின்றார்கள். ஐம்பொறியடக்கமுடையவனாய் நற்கல்வி பயின்ற மாணவன் துறவு நிலைக்குரிய உள்ளத்தோடு கல்விப்பயிற்சி முடிவிலே மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பவற்றை நாடி யாத்திரை செய்தல் அக்காலத்து வழக்கம். அங்ஙனஞ் செல்வோனைப் பெற்றோரும் பிறரும் இல்லறத்திற் புகுத்த முயன்ற காலை, மணம் நிகழ்ந்தது. மாணவனது யாத்திரையைப் பரதேச யாத்திரையென்றும் கல்விப் பயிற்சி முடிவைச் சமாவர்த்தனமென்றும் வடநூலார் கூறுவர்.

**திருநீறிடுதல் (புனற்சுத்தி):**

திருநீறிடும் நீரைப் புனிதமாக்குவதற்கு முக்கண் முதல்வர் அதைப் பார்ப்பதாக நினைந்து, 'செஞ்சுடர்த் தூயசோதி நின்னருள் சிறக்க' என்னு மந்திரங்கூறி நீரைப் பார்க்கவும்.

**உட்கோள் :**

நீரினை உள்ளங்கையில் உழுந்து அமிழும் அளவு எடுத்து மும்முறை உட்கொள்ளுக அப்போது

ஓம் உயிர்முதற் குரியதாக
ஓம் புலமுதற் குரியதாக
ஓம் சிவமுதற் குரியதாக

என்பவற்றையுரைக்க.

திருநீற்றினை உள்ளங்கையில் வைத்து மூடிப் பின்வரும் சொற்றொடர்களைக் கூறிப் புனலிட்டுக் குழைத்து முக் குறியிடுக. அவையாவன :

**கலை மறைகள் :**

ஓம் வீடருளன்னை போற்றி
ஓம் நிலையருளன்னை போற்றி
ஓம் அறிவருளன்னை போற்றி
ஓம் அமைவருளன்னை போற்றி
ஓம் ஒன்றருளன்னை போற்றி.
ஓம் வான் முதல் போற்றி.

**மந்திரங்கள் : பதினொரு பஞ்சப் பிரமம் :**

ஓம் பொன்னவ போற்றி
ஓம் வளியாய் போற்றி
ஓம் ஒளியாய் போற்றி
ஓம் அமுதே போற்றி

அல்லது,

பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி

**ஆறங்க மந்திரம் :**

உள்ளத்தாய் போற்றி
சென்னியாய் போற்றி
உச்சியாய் போற்றி
காவலா போற்றி
முக்கணா போற்றி
ஏவொளி போற்றி.

**திருவைந்தெழுத்து :**

ஓம் நமசிவாய என்பது போகம் விரும்பினோர் எண்ணுதற்குரியது.

ஓம் சிவாயநம என்பது முத்தி விரும்பினோர் எண்ணுதற்குரியது.

**மூச்சடக்கு (பிராணாயாமம்) :**

திருவைந்தெழுத்தை இருமுறை சொல்லி மூச்சை இடது நாசிவழியாக இழுத்து அதனை எண்முறை சொல்லி உள்ளே நிறுத்திப் பின் வலது நாசிவாயிலாக ஐந்தெழுத்தை நான்கு முறை சொல்லும் வரை மெள்ள வெளியிடுதலும், அவ்வாறே மூச்சை வலது நாசியாலிழுத்து நிறுத்தி இடது நாசியால் வெளியிடுதலும், மூச்சடக்கு என்னும் பிராணாயாமமாம். இருநாசியாலும் இழுத்து நிறுத்தி விடுதலுமுண்டு.

**சத்தித்தியானம் :**

திருநீறிட்ட பின் பருகுநீர் மும்முறை உட்கொண்டு, மூச்சடக்கு இயற்றிப் பின்னர் சிவசக்தியை நினைத்தல் நிகழற்பாற்று. காலையில் நெஞ்சினிற் படைப்புச் சக்தியைச் செம்மேனியுஞ் செஞ்சடையும் செவ்வணிகளும் நான் முகமுமுடையவளாய், வலது கைகளில், ஓமத்தில், நெய் பெய்யுஞ்சிருக்கும், செபமாலையும் இடது கைகளில் தண்டு கமண்டலமு முடையவளாய் அன்ன வாகனத்தின் மேல் வீற்றிருப்பதாகத் தியானிக்க.

**நண்பகலில்,**

புருவ நடுவே வெள்ளையுடையும் வெண்ணிறமும் துளசி மாலையுமுடையவளாய், அபயமுங் கதையும் வலக்கைகளிலும், சங்கு சக்கரம் இடது கைகளிலும் கொண்டு, கருடன் மேல் வீற்றிருக்குங் காப்புச் சத்தியை நினைக்க.

**மாலையில்,**

பிரமாந்திரமாகிய உச்சியிலே, கருநெய்தற் பூவன்ன ஒளிநிறமுடையவளாய் முக்கண்ணும், பிறைச்சடையும் உடையவளாய் வலது கரங்களிற் சூலமும் செபமாலையும், இடது கைகளில் அபயமுஞ் சத்திப்படையுங்கொண்டு காளை

மேலிருக்கும் அம்மையை ஒடுக்குஞ் சத்தியாக வழிபடுக. சந்தியாதேவி, நுட்பவடிவமாக நள்ளிரவில் துவாத சாந்தத்திற் தியானிக்கற்பாலள்.

**உட்புனிதம் :**

திருநீறிடுவான், நிறைமொழிப்படுத்த நீரைச் சிவதீர்த்த மாகக் கருதி ஐம்முக மந்திரமோதித் தலையிற்றெளித்துக் கொண்டு, சிறிது நீரை எடுத்து நாசி வழியாக உடன் முழுதுஞ் சுத்தி செய்ததாகப் பாவித்து, காற்பெரு விரலில் விட்டு அசுத்தியெல்லாம் எரிந்தொழிந்ததாகக் கருதுக. கைச்சுத்தி செய்க.

**தர்ப்பணம் : (நீர் நிறைவு)**

பின், புனலினைச் சிறிது சிறிதாக எடுத்துச் சிவபெருமானுக்கும் உமையம்மைக்கும், தாம் சிறப்பாக வழிபடுமூர்த்திக்கும் 'உரியதாக' என்றியம்பி மும்முறை புனலளித்தலும், எல்லா மந்திர மூர்த்திகட்கும் எல்லாத் தேவர்கட்கும் எல்லா முனிவர்கட்கும் எல்லாப் பூதங்கட்கும் மனிதர்க்கும், பிதிரர்க்கும் ஆசிரியன்மார், தோழன்மார் முதலியோர்க்கும் நமது கடமையைச் செய்ய வேண்டு மென்பதை நினைவுறுத்தற் பொருட்டு, அவர்கட்கு 'உவகையாக' என்று புனலிரைத்தலும், ஒரு சடங்காகும். அது தர்ப்பணமெனப்படும்.

**கடவுளிடம் ஒப்புவித்தல் :**

'எச்செயலைச் செய்தாலும் அதன் பயனை இறைவன் பால் ஒப்புவிக்க' என்பதற்கிணங்கத் திருநீற்றீட்டின் முடிவில், இச்செயற் பயன் சிவத்திற்குரியதேயென நீரினைக் கையாலெடுத்து விடுக. மணச்சடங்கு முதலியன மேற் கூறப்பட்டன.

**சட்டிபூர்த்தி :**

அறுபதாண்டு நிறைவிலே, சிறப்பாகச் சிவபெருமானை வழிபடுவதுண்டு. கணபதி, தென்முகத் தெய்வம், துர்க்கை

நந்தி, வயிரவர், ஒன்பது கோள் முதலியவர்களுக்குச் சிறப்பாக வழிபாடு செய்தலுமுண்டு.

**சதாபிடேகம் :**

எண்பத்து நான்காவது ஆண்டின் நிறைவிலே அவ்வாறு செய்வதுடன் திக்குப்பாலகர்க்கும், மும்மூர்த்திகட்கும், பராசரர், அகத்தியர், வியாசர், சுகர் முதலிய முனிவர்கட்கும் பிறந்த திதி, நாள் (நட்சத்திரம்) என்பவற்றிற்குரிய தேவதைகட்குஞ் சிறப்பாக வழிபாடு செய்யலாம்.

அறுபதாண்டு அல்லது எண்பத்து நாலாவதாண்டு முற்றுப் பெற்றவுடன், ஆடவர் தமது மனைவியர்க்கு உருத்திராக்கத் தாலிகட்டிச் சிற்றின்ப வாழ்க்கையை வெறுத்துக் கடவுட்பணியை மேற்கொள்ளற் பாலர்.

**இறுதிநாட் சடங்கு :**

ஒரு மனிதன் இறக்குமுன் அவனுக்குக் கடவுள் நினைவு உண்டாதற்பொருட்டு அவனுக்குத் திருநீறிட்டு அவன் செவியில் ஐந்தெழுத்து ஓதித் திருவருட்பாடலாகிய தேவார திருவாசகங்களைப் பாடல் வேண்டும். இறந்தபின், அவன் உடலைத் தூய நீராற் கழுவி ஆடை அணிவித்துத் திருநீறு மஞ்சட்பொடியுஞ்சாத்தி மூடிப் பாடைமேல் சங்கோசை யுடன் நன்காட்டிற்கு எடுத்துச் செல்க. மஞ்சட்பொடியைப் பொற்சுண்ணமாகப் பாவித்துத் திருப்பொற் சுண்ணம்பாடி, அதை ஒரு இலைத்துண்டில் வைத்து இறந்தவர் மடியிற் செருகுதலுண்டு. மயானத்திலே, தலை தென்புறமிருப்பச் சிதையின்மேற் பிணத்தைவைத்திடுக. மண்கும்பம் வைத்துத் சிவனை அதிற் பூசித்து, அதை எடுத்துத் துவாரஞ்செய்து அதன்வழியாக நீரொழுகுங்கால், பிணத்தை மும்முறை மாறிச் சுற்றிவந்து தலைப்பக்கத்தில் வடக்கு முகமாக நின்று கும்பத்தின் மேலோட்டை நீக்கிக் கபாலம் போன்ற எஞ்சிய பகுதியில் உள்ள நீரில் அரிசியிட்டு, அவ் அரிசியை இறந்தவன் வாயிற்போடுக. நெருப்பு வளர்த்து அதிற் சிவத்தைப் பூசித்த பின், அதனை எடுத்துத் தலைப்பக்கம் வைத்துத் தீ மூட்டுக.

தகன முடிந்தபின், எலும்புகளை எடுத்துப் புனித நீர் நிலைகளில் விடுக. அல்லது ஒரு பானையிற்சேமித்து வைத்துப் புண்ணிய நதியிலிடுக. தகனஞ்செய்த இடத்தைச் சுத்திசெய்து முளையடித்துப் பால் தெளிக்க.

பத்து நாள் வரை கடவுளைப் பூசித்து 'இவ்வுயிர் மாணுறு நாகிடையாழாமே யருளரசே, போற்றி' யெனப் பெருமானைக் குரையிரந்து நிற்க.

**கல் வழிபாடு (கல்லெடுப்பு):**

இறந்தவனை நினைவூட்ட, ஓரடையாளமாக ஒரு படத்தையேனும் கல் வடிவத்தையேனும் வைத்து அவ்வடிவத்தின் முன்னிலையில், ஒரு தர்ப்பை மீது எள்ளும் நீருந் தெளித்து ஒவ்வொரு பிண்டம் இறந்தவன் பெயர்கூறி அவன் ஆவிக்குரியவாகுக என்றிடுக. பின் அதனையெடுத்துப் புனிதநீரில் விடுக. இறந்தவனை வழிபடுங்கால் சிவமானவா போற்றி என்ற அருண் மொழியை முடிவாகக் கூறி மலர் தூவுக பத்தாநாள் முடிவில் சிறப்பாகப் படைப்பிட்டு வழி பாடியற்றி அடையாளத்தை ஆற்றிலாதல் வேறு நீர்நிலையிலாதலிடுக. இறந்த உயிர் சிவத்தைச் சார்ந்ததாகப் பாவிக்க.

**உருத்திர பலி :**

கல்லில் நின்ற உயிரை உருத்திர கும்பத்திற் சேர்ப்பது முண்டு. பின்னர், ஒடுக்கத் தலைவர்களாகிய பதினொரு உருத்திரர்களுக்கும் மகாருத்திரர்க்கும் பலியிடுதற் பொருட்டு நடுவில் மகாருத்திர கும்பமும் அதனைச் சுற்றிப் பதினொருவர் கும்பங்களும் வைத்துப் பூசித்து கும்பத்தின் மருங்குதெற்கு நுனியாக ஒரு வாழையிலை போட்டு அதன் மேல் இரண்டு தர்ப்பையிட்டு அதன்மேல் எள்ளினைத் தூவி, அதன்மேல் பச்சரிசி, வாழைப்பழம், சர்க்கரை, தேங்காய்த் துருவல் என்பவற்றின் கலவையைச் சிறிதுசிறிதாக எடுத்து உருத்திரர்களுக்குப் பலியாக இடுக. ஒரு புதுப்பாத்திரத்தில் பிண்டம் பெறுதற்குரிய பிதிர்களுக்கும் அவ்வாறே பலி

கொடுக்க. அந்தப் பாத்திரத்தைத் தர்ப்பையோடு மும் முறை மாற்றிச் சுற்றித் தர்ப்பையைப் போட்டுவிட்டுப் பாத்திரத்தைக் கவிழ்க்கவும். பின்னர்க் கும்ப தேவதை களை அகத்திலொடுக்கிக்கொண்டு எல்லாவற்றையுங் களைக.

**பதினொரு உருத்திரர் பெயர் :**

மகாதேவர், அசுரர், உருத்திரர், சங்கரர், நீலலோகிதர். ஈசானர், விஜயர், பீமர், தேவதேவர், பவோற்பவர், கபா லீசர், மகாருத்திரர், சிவபிரான்.

**ஏகோதிஷ்டம் :**

தீட்டுக்கழிந்தபின், இறந்தவுயிரின் பிரதிநிதியாகக் கருதப்பட்ட சிவனடியார் ஒருவரை வருவித்து அவரிலே இறந்தவுயிரைப் பூசித்து, எல்லா வகைக் கொடையுமளித்தல் ஒருவர்ப் பெருங்கொடை (ஏகோதிஷ்ட) யென்னப்படும், ஒரு பிண்டம் இறந்தவர் பொருட்டு அவர் முன் இட்டுப் பூசித்து அதனைப்பின் நீரில் விடுக.

**சபிண்டிகாணம் :**

பிதிர் வகையார்க்கு ஒரு இலையும், இறந்தவர்க்கு ஒரு இலையும், பிதிரர்கள் போயடைதற்குரிய பதவிகளுக்கதிபதி யாகிய விசுவ தேவர்களுக்கு ஒரு இலையும், முன் அறியாத வர் முன் அறிந்தவர் என்னுமிரு திறத்து விருந்தினர் பிதிர் பொருட்டு ஓரிலையுமாக நான்கு இலை இட்டுச் சிரார்த்தஞ் செய்வது, வடிவ மாக்குதலாகிய சபிண்டிகாணமெனப்படும். இறந்த வர்க்கும், அவர் தந்தை வகை மூன்று பிதிர்களுக்கும், தாய்வகை மூன்று பிதிர்களுக்கும் ஆக எழுவர்க்கும் ஏழு பிண்டமிடுக.

**பிண்டமிடுமுறை :**

ஒரு தூய இடத்திலே முக்கோணமாய் மெழுகி அதில் மூன்று வரிசையாக நுனித்தர்ப்பையிட்டு இறந்தவரது தகப்பன் வழி மூன்று பிதிர்கட்கும், தாய்வழி மூன்று பிதிர்

களுக்கும், விளிப்புத் தர்ப்பைகளில் முன் மூன்றிடங்களில் எள்ளும் நீருந்தெளித்து ஒவ்வொரு மாவுருண்டை அல்லது அன்ன உருண்டை வைக்கவும். நடுவிலுள்ள தர்ப்பையில் இறந்தவர்க்குப் பிண்டமிடுக. பிண்டங்கள் எல்லாவற்றிற் கும், மலர் சாத்துதல், சந்தனஞ் சாத்துதல், நறும்புகை யெடுத்தல், நிவேதித்தல், சூடன் பணிமாறல் முதலிய எல்லா வழிபாடு முடிந்தபின்,இறந்தவர் ஆணானால் அவர் பிண்டத்தை மூன்றாகப் பகுத்துத் தகப்பன் வழிப் பிதிர் பிண்டங்களினும், பெண்ணானால், தாய்வழிப் பிதிர்ப் பிண்டங்களிலும் பகுதிகளைச் சேர்த்திடுக. பின் அவற்றை வைத்த முறைக்கு மாறாய முறையில் எடுத்து ஒரு பாத்திரத் தில் வைத்துப் புனித நீர் நிலையில் விடுக. சிரார்த்தத்தில் ஆறு பிண்டங்களைத் தாய் வழிக்கும் தகப்பன் வழிக்கு மிட்டு, மத்தியில் மற்ற எல்லாப் பிதிர்களுக்குமாக ஒரு பிண்டமிடுதல் மரபு. அப்பிண்டத்தைப் பகுப்பதில்லை. இறந்தவர், மூன்று பிண்டத்தில், முதற்பிண்டத்திலிருப்ப தாகக் கருதப்படுவர். பிண்டமிட்டபின், பிதிர்களுக்கு எள்ளும் நீரும் இரைத்துத் தர்ப்பணம் செய்க.

இறந்தவர்களையும் இனமான பிதிர்களையும் அவர்கள் செல்கதிக்கண் பேரருள் நல்குந் தெய்வங்களையுங் கருதிச் சிரார்த்தஞ் செய்யப்படுகிறது. அச்சடங்கு செய்ய இயலா தவர், பரமசிவனை வழிபட்டு, அவர்க்குப் படைத்த திருவ முதை அன்பர்க்குப் பகுத்துக் கொடுத்து இறந்த உயிர் நன்னிலையெய்த அருள்கவென்று இறைவனை வேண்டுக.

ஒருவர் இறந்த பதினோராம் நாளிலும் மாதந்தோறும் வருந்திதியிலும், நாற்பத்தைந்தாம் நாளிலும் ஆறாவது மாதத்திலும், ஆண்டிறுதியிலும், ஆண்டுதோறுஞ் சிரார்த்தஞ் செய்யப்படுகிறது.

**நாந்தி சிரார்த்தம் :** மங்கலச் செய்திகள் நடக்குங்காலை பிதிர் வழிபாடு செய்வோர் பிண்டமிடுவதில்லை. செய்யுங் காரியத்தைப் பிதிர்கள் வாழ்த்த வேண்டுமென்றும், பிதிர்களுக்கு இறைவன் நற்கதியளித்தல் கருதியும் அது

செய்யப்படுகின்றது. பிதிரின் பிரதிநிதியாகிய ஒருவர்க்குத் தேங்காய், பழம் அளித்தல் நிகழும்.

**சிரார்த்தம் அல்லது இறந்தவர் நாட்கடன் :** இறந்தோர்க்கு இவ்வுலகில் நடக்குஞ் செய்திகளை அறியுமறிவு உண்டென்றும் அவரை நினைந்து ஒரு சிறப்புச் செய்யுங்கால் அவர் ஆவி மகிழ்கின்றதென்னுங் கருத்தை அடிப்படையாகக் கொண்டு சிரார்த்தஞ் செய்யப்படுகின்றதென்ப.

இறந்தவர் பொருட்டு ஓர் குறியிட்டுச் சந்தனம், குங்குமம், மாலை முதலியன சாத்தி உணவு வகைகளைப் படைத்து அவற்றை உரிமையுடையோர் பயன்படுத்தலே போதுமானதென்ற கொள்கையுமுண்டு.

இப்பொழுது நடக்கிற சிரார்த்தத்தில் சிலர் மூன்று இலையும் சிலர் இரண்டு இலையும் கொடுக்கிறார்கள். இறந்தவர்கள் சிலருடைய ஆவி உயிரோடிருக்கின்றவர்களுடைய ஆவியிற்கலந்து பேசுவது காணப்படுகின்றது என்ற கொள்கையானது இக்காலத்திலே இந்நாட்டிலும் மேலைநாட்டிலும் அறிஞர் சிலரால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இறந்தவர் எல்லாருடைய ஆவியும் அப்படி வருவதில்லை. இறந்த ஆவி அங்ஙனம் இவ்வுலகிற்கு வரக்கூடிய நிலையில்லாதிருந்தாலும், இன்னொரு பிறவியெடுத்து விட்டாலும் அதன் பொருட்டுச் செய்யப்படும் உபசாரத்தை அது எவ்வாறு ஏற்றுக் கொள்ளும்? எவருடைய உயிரில் இறந்தவர் ஆவி கலக்கின்றதோ அவரை வருவித்துச் சிரார்த்தம் நடத்துவதாகவும் தெரியவில்லை.

இறந்தவரின் ஆவி இவ்வுலகில் நிகழ்வதை அறியக்கூடிய நிலையிலிருந்தாலும், அதற்குப் பிரதிநிதியாக ஒரு மனிதனை வரவழைத்து உபசாரஞ் செய்யவேண்டிய அவசியமிருப்பதாகத் தெரியவில்லை. இறந்தவர் பிரதிநிதியாக உபசரிக்கப்படும் மனிதர் தமது நினைவாற்றலினாலே இறந்தவர் ஆவியைத்தம்பால் வருவித்துத் தமக்குச் செய்யும் உபசாரத்தை அதற்கு ஏற்பிக்கக் கூடியவராயிருந்தால்

அவரை வைத்துச் சிரார்த்தஞ் செய்தல் நலமே. இறந்தவர் களின் நினைவிற்காக ஆடைகள் வைத்தும் உணவுப் பொருள்கள் படைத்தும் வணங்குகிறவர்கள் பிரதிநிதி களைத் தேடுவதில்லை. சிரார்த்தஞ் செய்கின்றவர்களும் ஆடை கிடையாத விடத்துத் தர்ப்பையினாலே கூர்ச்சமிட்டு அதன்முன் எல்லாவற்றையும் படைக்கின்றார்கள். ஆதலால் இறந்தவர் ஆவியை மகிழ்விக்க விரும்புகின்றவர்கள் ஒரு குறியின்கண் அவர்களைப் பாவித்து எல்லாவகை உபசாரங் களையும் செய்யலாமென்று தெரிகிறது.

சிரார்த்தத்தில் பிதிர்க்குக் கொடுக்கின்ற இலை தவிர மற்றொரு இலை இறந்த உயிர் எவ்வுலகத்துக்குப் போதல் கூடுமோ அவ்வுலக அதிபதியாகிய தேவதைகளுக்கு உரியதா கின்றது. அத்தேவதையையுங் கூர்ச்சத்தில் வழிபடுவதுண்டு.

இறந்தவர் நற்கதியடையும் பொருட்டு எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானுக்கு வழிபாடு செய்தல் சிறந்ததே.

சிரார்த்தத்தில் மூன்றாவது இலை பிராமணர்களால் செய்விக்கப்படும் சிரார்த்தங்களில் அவர்கள் குலதெய்வ மாகிய நாராயணனுக்கும் சைவரால் செய்விக்கப்படும் சிரார்த்தங்களில் விருந்தாகவரும் பிதிர்களுக்கும் இடப்படு கின்றது. அந்த இலை அவ்வளவு அவசியமில்லை.

சிரார்த்தக் கிரியைகளுட் பிண்டமிடுதல் ஒரு சிறந்த கிரியையாகும். பச்சரிசி மாவிலே தேனும், வாழைப்பழமும், எள்ளும் கலந்து ஏழு உருண்டை செய்யப்படுகின்றது, அன்னத்தில் தேன் முதலிய கலந்து பிண்டமிடுதலுமுண்டு. மா அல்லது அன்னம் உடம்பின் தசைக்கு அறிகுறியாகவும், எள்ளும் நீரும் இரத்தச்சத்திற்கு அறிகுறியாயுமிருப்பதெனக் கூறுவதுண்டு. இதனாலே பிண்டம் என்பது இறந்தவர் உடம்பிற்குப் பிரதிநிதியாகக் கருதப்படுகின்றது. அதனை இறந்தவர்க்கு உணவாகக்கருதின், உணவே உடம்பாகின்ற தென்று கொள்க. ஆதலால், பிண்டவழிபாடு இறந்தவர்

களின் பொருட்டுச் செய்யப்படும் வடிவ வழிபாடாகின்றது. அதனை விரும்புகின்றோர்கள் செய்து கொள்ளலாம்.

ஒரு சாரார் நெருப்பு வளர்த்து அதன்கண் சிவ பெருமானை வழிபட்டு சிவபெருமானோடு கலந்திருக்கும் பிதிர்களுக்கு நிவேதிக்கவேண்டிய பொருள்களை நெருப் பிலே சிறிதுசிறிதாக ஆகுதிசெய்து பிதிர்களைத் திருப்தி செய்வதுமுண்டு. அதுவும் ஓர் வகை வழிபாடே.

எல்லாவகைப் பிதிர்கட்கும் ஒரு தெர்ப்பை நுனி வழி யாக எள்ளும் நீரும் இரைத்து அவரவர் பெயரைக் கூறி அவரவர்க்குரியதாகுக—என்று பாவித்தல் தர்ப்பணமாகும்.

எள்ளு பசையுடையதாய் இரத்தச்சத்தைக் குறிப்பதால் தர்ப்பணம் மிக அவசியமென்றும், அதன் பலனை ஒரு வகைத் தேவசாதியாகிய பிதிர்கள் இறந்த உயிர்க்கு எப்படி யாவது சேர்ப்பரென்றுங் கூறுவர்.

இறந்த தாய் தந்தையர்க்குப் புண்ணியஞ் சேரவேண்டு மென்று கருதி அடியவர், உறவினர், தக்கவர், வறியவர் முதலியோர்க்கு உண்டியும் உடையுமுதவுதலும் ஆதரவு இல்லாத பிள்ளைகளுக்கு உணவுங் கல்வியும் அளித்தலும் செய்யற்பாலன.

மேற்கூறிய முறைகளை நோக்கும்போது இறந்தவரை மகிழ்விக்க அவர் ஆவியின் வழிபாடும் அவர் உயிர்க்கு நற்கதி கிடைக்கும் பொருட்டுக் கடவுட் பூசனையும் அறச் செய்கையும் நடைபெறுதல் புலனாம்.

ஆதலால் இறந்தவர்பால் நமது நன்றி உணர்ச்சிக்கு அறிகுறியாக ஏதாவது ஒருவகை வழிபாடும் அவர் ஆவியின் நற்கதியின் பொருட்டுக் கடவுட் பிரார்த்தனையும் தக்க அறச்செய்கையும் இயன்றவரை யாவரும் செய்யக் கடமைப் பட்டிருக்கின்றார்கள். செல்வவான்கள் நிலைவரமான ஓர் அறத்தை ஏற்படுத்தி நடத்துதல் இன்றியமையாததாகும்.



